


உ

சிவமயம்

# உழவாரம்

சமய இலக்கியத்திங்கள் இதழ்

மலர் 16 ] மார்ச், ஏப்ரல் 2001 [ இதழ் 9&10

பெருமைதரு ஆசிரியர், 'திருமுறைக்காவலர்' 'அறமனச் செம்மல்'

கபிலைத் திரு. **M. கண்ணப்ப செட்டியார்** அவர்கள்

(திருவாக இயக்குநர், ஸ்ரீ மங்கையர்க்கரசி ஆலை)




திருஞானச[illegible]ருபூஜை நாள் 7—6—2001




2001
மார்ச் & ஏப்ரல்
மலர் 16
இதழ் 9&10

மதுரைப் பன்னிரு திருமுறை மன்றத் திங்கள் இதழ்

## நாளது சிந்தனைக்கு

### 'கள்ளம் ஒழிந்திடுமின்'

உள்ளம் இச்சையினால் உகந்தேத்தித் தொழுமின்
தொண்டீர் மெய்யே
கள்ளம் ஒழிந்திடுமின் கரவா திருபொழுதும்
வெள்ளம் வார்சடைமேற் கரந்திட்டவெள் ளேற்றாமேய
அள்ளல் அகன்கழனி ஆரூர் அடைவோமே.

—திருஞானசம்பந்தர்

தொண்டர்களே! பெருமானை உண்மையாக மனத்தில் அன்போடு பக்தியோடு விரும்பித் துதித்து வணங்குங்கள் மனத்தில் வஞ்சகம் நீங்குங்கள். கங்கை வெள்ளத்தைத் தனது நீண்ட சடையில் அடக்கிவிட்ட வெண்மையான இடப வாகனத்தை உடைய, பெருமான் அமர்ந்துள்ளதும் அகன்ற சேறு கொண்ட வயல்களையுடையதுமான திருவாரூரை மறவாமல் காலை மாலை இரு வேளைகளிலும் நாம் போய் அடைவோம்.

---

பரிபூரண மனிதருக்கும் இன்றியமையாத இரண்டு குணங்கள் அன்பும், கொடையுமே ஆகும். —புல்வர்

# பெரியபுராணம்

இரா. குருசாமி M.A., M.Phil.,

(— சென்ற இதழ்த் தொடர்ச்சி)

பாண்டிய நாட்டில் மதுரையம்பதியில் வேறு ஒரு பெண்ணைத் திருமணம் செய்து வாழ்ந்து வந்தான். தனக்குப் பெண் குழந்தை பிறந்தது. தன் முன்னாள் மனைவியின் பெயரைத்தன் மகளுக்கு இட்டு வளர்த்தனன். பாண்டிய நாட்டில் செல்வச் செழிப்புடன் வாணிகம் செய்து வாழ்ந்து வரும் பரமதத்தனின் செய்தி காரைக்காலில் பரவியது உடனே உறவினர்கள் புனிதவதியாரை ஒரு சிவிகையில் ஏற்றிக் கொண்டு மதுரையில் வாழ்ந்து வரும் பரமதத்தனின் வீட்டிற்கு அழைத்து வந்தனர்.

பரமதத்தன் தன் மூத்த மனைவியாகிய புனிதவதியாரைக் கண்ட வுடன் தன் இளைய மனைவி குழந்தையுடன் புனிதவதியாரின் திரு வடிகளில் வீழ்ந்து வணங்கினான். தன் கணவனின் மனத்தை நன்கு அறிந்து தெளிந்த புனிதவதியார் ஈசன் அருளால் பேய் உருவத்தைப் பெற்றார்.

மலர்மழை பொழிந்த தெங்கும்; வானதுந் துபியின் நாதம்
உலகெலாம் நிறைந்து விம்ம உம்பரும் முனிவர் தாமும்
குலவினர்; கணங்கள் எல்லாங் குணலையிட்டன; முன்நின்ற
தொலைவில்பல் சுற்றத்தாரும் தொழுதஞ்சி அகன்றுபோனார்.

என்ற நிகழ்வைச் சேக்கிழார் படம் பிடித்துக் காட்டுகிறார்.

இறையருளால் அம்மையார் அற்புதத்திருவந்தாதியும் திரு இரட்டை மணிமாலையும் பாடினார். திருக்கயிலயங்கிரிக்கு காலால் நடப்பதைத் தவிர்த்து தலையால் நடந்து சென்றார். சிவபெருமான் 'அம்மையே' என்று அழைக்க அம்மையாரும் 'அப்பா' என்று அழைத்து தாம் என்றும் ஐயன் திருவடிக்கீழ் இருக்க வேண்டும் என

---

நடத்தை என்ற நிலைக்கண்ணாடியில் ஒவ்வொருவருடைய உருவமும் தெரிகின்றது. —கதே

வேண்டினார். இறைவன் ஆணைப்படியே தலையால் நடந்து திருவாலங்காட்டை அடைந்தார். 'கொங்கை திரங்கி' 'எட்டியலவ மீகை' என்னும் திருப்பதிகங்களைப் பாடினார். பின்னர் காரைக்கால் அம்மையார் சிவஞானப் பேற்றைப் பெற்றார்.

## 25. அப்பூதியடிகள் நாயனார் புராணம்

பச்சைப்பட்டாடை விரித்தன்ன பசும் பயிர்கள் நின்ற மருத வளம் கொழிக்கும் சோழப் பெருநாட்டில் நிலவளமும் நீர்வளமும் ஒருங்கே பெற்று காவிரியாறு வளம் தரும் திங்களூர் பெயருக்கேற்ப குளிர் தரும் நல்லூராகும். பல்வகை நீர்ப்பூக்கள் மணம் பரப்பும் அங்கு அப்பூதியடிகள் என்னும் அடியார் சிவநெறிச் செம்மலாகவும் திருத் தொண்டால் உயர்வுபெற்ற திருநாவுக்கரசரின் தாசனாகவும் விளங் கியவர் அவர் தன் இல்லத்தில் தன் பிள்ளை பெற்றம் (பசு), எருமை அளவை, நிறைகோல், தாம் அமைத்த திருமடம், தண்ணீர்ப்பந்தல் கல்விக்கூடம் ஆகிய அனைத்திற்கும் 'திருநாவுக்கரசு' என்னும் பெயர் சூட்டி அவர் பெயராலேயே பல்லாண்டுகளாகத் திருத்தொண்டு செய்து வந்தார்.

அவ்வாறு நடந்து வரும் நாளில் ஒருநாள் திங்களூர் வந்த திருநாவுக்கரசர் அங்குள்ள எல்லா இடங்களிலும் தன் பெயரே இருக்கக்கண்டு அக்காரணத்தைக் கேட்டறிய அப்பூதியடிகளார் தம் மனைக்குச் சென்றார்.

'ஆறணியுஞ் சடைமுடியார் அடியார்க்கு நீர் வைத்த
ஈரில்பெருந் தண்ணீர்ப்பந் தரில் நும்பேர் எழுதாதே
வேறொருபேர் முன்னெழுத வேண்டிய காரணம் என்கொல்?
கூறும்' என எதிர்மொழிந்தார் கோதில் மொழிக் கொற்றவனார்.

என்ற சேக்கிழார் கூற்றுப்படி திருநாவுக்கரசர் அப்பூதியடிகள் இடம் கேட்டார்.

---

அதிர்ஷ்டத்தை நம்பியிருக்க வேண்டாம். ஒழுக்கத்தை நம்பியிருங்கள். —பப்ளியஸ் ஸைரஸ்

நின்றமறை யோர்கேளா நிலையழிந்த சிந்தையராய்
'நன்றருளிச் செய்திடுவீர்! நாணில் அமண் பதகருடன்
ஒன்றியமன் னவன்சூட்சி திருத்தொண்டின் உறைப்பாலே
வென்றவர்தம் திருப்பேரோ வேறொருபேர்?' எனவெருள்வார்.

என்கின்ற பெரியபுராண அடிகளுக்கேற்ப அப்பூதியடிகள் பல்லவ மன்னன் சமணரோடு சேர்ந்து செய்த கொடுஞ் சூழ்ச்சிகளை எல்லாம் திருத்தொண்டின் உறைப்பால் வென்ற ஒருவர்பெயரே திருநாவுக்கரசு திருத்தொண்டாலே இம்மையிலும் பிழைக்கலாம் என்று எம்போன்றோர்க்கு அறிவுறுத்தியவர் திருநாவுக்கரசர் என்று உரைத்தார். கேட்ட நாவரசர் அப்பூதியடிகளின் சிறப்பை உணர்ந்தவராய் தான் யார் என்பதனை அவருக்கு உணர்த்தினார். உடனே திருநாவுக்கரசரின் திருவடிகளில் அப்பூதியார் விழ்ந்து வணங்கி பின் அவரை விருந்துண்ண அழைத்தார்.

திருநாவுக்கரசருக்கு அமுது படைக்க வாழை இலை பறிக்கச் சென்ற அப்பூதியாரின் மகன் அரவு தீண்டி மாண்டான், அடியார்க்கு விருந்து படைப்பதையே பெரும் பேறாகக் கருதிய அப்பூதியாரும் அவரது துணைவியாரும் மைந்தனின் உடலை மறைத்து வைத்தனர். விருந்து உண்ணவந்த திருநாவுக்கரசர் அப்பூதியாருக்கும் அவரது துணைவியாருக்கும் மகன் திருநாவுக்கரசுக்கும் திருநீறு கொடுக்க வந்தார். திருநீற்றைப் பெற்றுக்கொண்ட இருவரும் தம் மகன் 'இங்கு இப்போது உதவான்' என்றனர் காரணங்கேட்ட அடியார்க்கு உண்மை நிலையை விளக்கிக் கூறினர். அப்பூதியாரின் மகனின் உடல் இருந்த இடத்திற்கு வந்து திருநாவுக்கரசர்,

நாவினுக் கரசர் கேளா 'நன்றுநீர் புரிந்த வண்ணம்!
யாவர்இத் தன்மை செய்தார்? என்றுமுன் எழுந்து சென்றே
ஆவிதீர் சவத்தை நோக்கி அண்ணலார் அருளும்வண்ணம்
பாவிசைப்பதிகம் பாடிப் பணிவிடம் பாற்றுவித்தார்.

[சேக்கிழார்]

---

**வீரச்செயலைவிட, துன்பம் சகிக்கும் சக்தியே உயர்குணத்திற்குரிய சிறந்த சாதனையாகும். —ஆவ்பரி**

உறக்கம் நீங்கி எழுந்தவன்போல் உயிர்பெற்று எழுந்த இளைய திருநாவுக்கரசு, திருநாவுக்கரசு நாயனாரை வணங்கி நின்றான். திருநாவுக்கரசு சுவாமிகள் அப்பூதியின் சிறப்புக்களை தன்பதிகத்தில் பாடிச் சிறப்பித்தார். அப்பூதியடிகள் திருத்தொண்டு பலசெய்து முடிவில் தில்லைக்கூத்தன் திருவடியை அடைந்தார்.

## 26. திருநீலநக்க நாயனார் புராணம்

தாமரை மலரின் மேல் கயல்மீன்கள் துள்ளிவிளையாடும் கழனி சூழ் சோழவளநாட்டில் சாத்தமங்கை என்னும் திருத்தலத்தில் அந்தணர் ஒருவர் வாழ்ந்து வந்தார். மறைபொருள் கற்றுணர்ந்த சான்றோராகிய அவர் சிவபெருமானையும் அவனது அடியார்களையும் வணங்குதலே தன் வாழ்க்கைக் குறிக்கோளாகக் கொண்டு ஒழுகி வந்தார். திருநீலநக்கர் என்னும் பெயர் கொண்ட அவ்வடியார் நாள் தோறும் சிவனுக்கு அர்ச்சனை செய்வதும் சிவனடியார்கள் திருவடி வீழ்ந்துவணங்குவதையும் தன் குறிக்கோளாகக் கொண்டு வாழ்ந்து வந்தார்.

ஒருநாள் அயவந்தி ஆலயத்தில் குடும்பத்துடன் சென்று இறைவழிபாடு செய்தார். அவ்வேளையில் ஒரு சிலந்தி சிவபெருமானின் திருச்சிலையில் விழ்ந்தது. நக்கரின் துணைவியார் உடனே தன் வாயினால் இலிங்கத்தின் மீது ஊதினார் அதனைக்கண்ட திருநீலநக்கர் மனம் கொதித்தவராய் வெகுண்டு அம்மையாரைநோக்கி,

'சிலந்தியை நீ வேறொரு வகையால் நீக்கியிருக்கலாம் எச்சில் பட ஊட ஊதிய உன் செயல் அடாது. எனவே நான் உன்னைத் துறந்தேன் என்னை விட்டு நீ நீங்குவாயாக' என்று கூறிவிட்டு தான் மட்டும் வீட்டிற்குப் புறப்பட்டார். ஆனால் அம்மையார் வீடு செல்ல அஞ்சியவராய் குழந்தையுடன் திருக்கோவிலிலேயே இரவு முழுவதும் தங்கிவிட்டார்.

—தொடரும்

---

அதிகார வெறியால் அநேக முறை மனிதன் தன் பிழைகளை உணர்வதில்லை. —காந்தியடிகள்

## தலவரலாறு

## திருப்பட்டீச்சரம்

சோழநாட்டு தென்கரைத் தலம். 127-ல் இது 23-வது திருத்தலம்.

ஊர்-பழையாறை. கோயில்-பட்டீச்சரம்

1) கும்பகோணம்-ஆவூர்-சாலையில் சென்று இத்தலத்தை யடையலாம். கோயில்வரை வாகனங்கள் செல்லும்.

சத்திமுற்றமும் பட்டீச்சரமும் ஒன்றுக்கொன்று அருகில் உள்ள தலங்கள் – இடையில் வீதிதான் உள்ளது. ஞானசம்பந்தருக்கு இறைவன் முத்துப்பந்தர் அருளிய சிறப்புடைய தலம். காமதேனுவின் புதல்வியருள் 'பட்டி' பூசித்தது ஆதலின் பட்டீச்சரம் என்னும் பெயர் பெற்றது. அம்பிகை தவஞ்செய்ததால் 'தேவிவனம்' என்றுபெயர். கோயிலின் தூண் ஒன்றில் இச்சிற்பம்-பசு பாலைச் சொரிந்து வழிபடுவது போன்ற சிற்பமுள்ளது. இறைவன் சந்நிதியிலும் இச்சிற்பம் சுதையிலுள்ளது.

இத்தலத்தில் ஐந்து நந்திகள் உள்ளன. அனைத்தும் சந்நிதியிலிருந்து விலகியேயுள்ளன. ஞானசம்பந்தர் வரும் காட்சியைக் காண இறைவன் நந்தியை விலகியிருக்குமாறு சொன்னதாகச் சொல்லப்படுகிறது. விசுவாமித்திரர், பிரம்மரிஷி பட்டம் பெற்றது இத்தலத்தில் தான். மார்க்கண்டேயர் பூசித்த சிறப்புடையது.

இராமேஸ்வரத்தில் இராமர் இராமநாதரைப் பிரதிஷ்டை செய்து வழிபட்டுத் திரும்பியபோது இங்கும் வில்முனையால் கோடி தீர்த்தம் உண்டாக்கி வழிபட்டதாக வரலாறு. இதனையொட்டி இங்கும் இராமலிங்கச் சந்நிதியும் கோடிதீர்த்தமும் உள்ளன.

இறைவன்—பட்டீச்சுரர், தேனுபுரீஸ்வரர்

இறைவி—ஞானாம்பிகை, பல்வளைநாயகி

தலமரம்—வன்னி

தீர்த்தம்— ஞானதீர்த்தம். (கோடிதீர்த்தக் கிணறு)

தலவிநாயகர்—அனுக்ஞை விநாயகர், மதவாரணப்பிள்ளையார்

சம்பந்தர் பாடல் பெற்றது.

---

உயர்வு நவிற்சியில் திளைப்பவர் தம்மைத்தாமே தாழ்வு படுத்துவோராவர். —ஸிம்மன்ஸ்

கிழக்குநோக்கிய கோயில். நான்கு கோபுர வாயில்களுடன் ஊர் நடுவில் உள்ளது. உட்புகுந்தால் விலகிய நந்தி பலிபீடங்கள் உள்ளன. கோயில் எதிரில் தீர்த்தமுள்ளது. இரண்டாம் கோபுர வாயிலில் விநாயகர் முருகன் சந்நிதிகள் உள. உட்புகுந்தால் இங்கும் விலகிய நந்தியைக் காணலாம். அலங்கார மண்டபம் அழகானது. மதவாரணப் பிள்ளையார் சந்நிதியுள்ளது. அடுத்த சுற்றில் சப்த கன்னியர், ரேணுகாதேவி, சுவர்ண விநாயகர், மகாலிங்கர், பால முருகன், சண்முகர், இராமலிங்கர், மகாலட்சுமி சந்நிதிகள் உள்ளன.

கோடிதீர்த்தம் கிணறு வடிவில் உள்ளது. அர்த்தமண்டபத்துள் சோமாஸ்கந்தர், ஞானசம்பந்தர் காட்சி தருகின்றனர். அம்பாள் கோயில் தனியே கிழக்குநோக்கியுள்ளது. இக்கோயில் மகா மண்டபத்தில் திருப்பணிகளைச் செய்த கோவிந்த தீக்ஷிதரும் அவர் மனைவியும் உளர். இங்குள்ள 'துர்க்கைக் கோயில் விசேஷமானது சோழர் காலப் பிரதிஷ்டை. அதுபோலவே இங்குள்ள கற்சிலை பைரவரும் சிறப்புடையது. ஆனித்திங்கள் முதல்நாளில் ஞானசம்பந்தர் முத்துப் பந்தர் பெற்ற திருவிழா நடைபெறுகிறது. 1978-ல் கும்பாபிஷேகம்.

---

## பதிகப் பெருவழி — 86

### திருப்பட்டீச்சரம்

திருஞானசம்பந்த சுவாமிகள் அருளியது

பண் : சாதாரி

திருச்சிற்றம்பலம்

பாடல்மறை சூடல்மதி பல்வளைபொர்
    பாகம் மதில் மூன்றொர் கணையால்
கூடஎரி யூட்டிஎழில் காட்டிநிழல்
    கூட்டுபொழில் சூழ்பழைசையுள்

---

குருட்டு அதிர்ஷ்டம் குருட்டுப் போக்கில் கொண்டு போய் விடும்.
—பிரான்ஸ்

மாடமழ பாடியுறை பட்டிசர
மேயகடி கட்டரவினார்
வேடநிலை கொண்டவரை வீடுநெறி
காட்டி வினை வீடுமவரே. 1

சிவபெருமான், வேதங்களால் ஓதப்படுபவர். சந்திரனைச் சூடி இருப்பவர்; பல்வளை என்னும் திருநாமம் கொண்டுள்ள உமாதேவியாரை, ஒரு பாகமாகக் கொண்டு இருப்பவர்; மதில்கள் மூன்றினையும் ஒரு கணை தொடுத்து, எரிந்து சாம்பலாகுமாறு செய்தவர்; வீரத்தின் எழிலாய் விளங்குபவர்; பொழில் சூழ்ந்த பழையாறையுள் மாட மாளிகை விளங்கும் மழபாடியுள் பட்டீச்சரத்தில் மேவி வீற்றிருப்பவர்; பாம்பினை அரையில் அசைத்துக் கட்டியவர். அப் பெருமான் சிவனடியார் திருக்கோலத்தில் உள்ளவர்களின் வினைகளை நீக்கி முத்தி நெறியை அருளிச் செய்பவராவார்.

நீரின்மலி புன்சடையார் நீளரவு
கச்சையது நச்சிலைய தோர்
கூரின்மலி சூலமது ஏந்திஉடை
கோவணமும் மானின்உரிதோல்
காரின்மலி கொன்றைவிரி தார்கடவுள்
காதல்செய்து மேயநகர்தான்
பாரின்மலி சீர்பழைசை பட்டிசரம்
ஏத்தவினை பற்றழியுமே. 2

சிவபெருமான் சடைமுடியில் கங்கை தரித்தவர்; நீண்ட அரவத்தைக் கச்சையாகக் கட்டியவர் சூலப் படையை ஏந்திக் கோவண உடைகொண்டு விளங்குபவர்; மான் தோல் உடையவர்; கொன்றை மாலை தரித்தவர். அத்தகைய கடவுள், உலகத்தில் சிறப்புடன் விளங்கும் பழையாறையில் மேவும் பட்டீச்சரத்தில் வீற்றிருப்பவர். அப் பரமனை ஏத்தி வழிபட, வினை நீங்கும்.

---

மௌனம் என்பது மனிதர்கள் பெறவேண்டிய அறிவு; அறிஞர் குணங்களில் ஒன்று. —பாய்லோ

காலைமட வார்கள்புனல் ஆடுவது
கௌவைகடி யார்மறு கெலாம்
மாலைமண நாறுபழை யாறைமழ
பாடியழ காயமலிசீர்ப்
பாலையன நீறுபுனை மார்பன்உறை
பட்டிசர மேபரவுவார்
மேலையொரு மால்கடல்கள் போல்பெருகி
விண்ணுலகம் ஆளு மவரே. 3

மகளிர், காலை வேளைகளில் தண்ணீர்த் துறைகளில் நீராடி மகிழும் ஓசையும், மாலை நேரங்களில் வீதிகளில் பாடி விளையாடி விளங்குகின்ற ஓசையும் பழையாறையின் மழபாடியில் திகழ்வதாகும். ஆங்குப் பால்போன்ற திருவெண்ணீறு புனைந்த மார்பினராய்ப் பட்டீச்சரத்தில் வீற்றிருக்கும் சிவபெருமானைப் பரவி ஏத்துபவர்கள், இம்மையில் கடல் போன்ற செல்வத்தை உடையவர்களாயும் மறுமையில் விண்ணுலகத்தின் வளத்தினில் திளைப்பவர்களாயும் விளங்குவர்.

கண்ணின்மிசை நண்ணிஇழி விப்பமுகும்
ஏத்துகமழ் செஞ்சடையினான்
பண்ணின்மிசை நின்றுபல பாணிபட
ஆடவல பால்மதியினான்
மண்ணின்மிசை நேரின்மழ பாடிமலி
பட்டிசர மேமருவுவார்
விண்ணின்மிசை வாழும்இமை யோரொடுஉடன்
ஆதல்அது மேவல் எளிதே. 4

ஈசனின் கண்களை, உமாதேவியார் தமது திருக்கரத்தால் புதைப்ப, அரும்பிய வியர்வைத் துளிகளைச் செஞ்சடையில் ஏற்றவர், அப்பெருமான். அவர், பண்ணின் இசை பெருகப் பலவகையான பாடல்களைப் பாடவும், ஆடவும் வல்லவர்; வெண்மையான சந்திரனைச் சடைமுடியில் தரித்தவர் அப்பரமன், மண்ணுலகில், இணை

---

உலகில் நடைபெறும் நிகழ்ச்சிகளை உண்மை வழியே தெரிவிப்பதே இலக்கியத்தின் பண்பு. — ஸாந்தாயனா

யற்ற பெருமையுடைய மழபாடியில் விளங்கும் பட்டீச்சரத்தில் விற்றி ருப்பவர், அவரை ஏத்துபவர்களுக்குத் தேவலோகத்தில் வாழ்கின்ற தேவர்களுடன் இணைந்து இருத்தலும், தேவர்களாக ஆதலும் எளிதாகும்.

மருவமுழவு அதிரமழ பாடிமலி
மத்தவிழவு ஆர்க்க வரைஆர்
பருவமழை பண்கவர்செய் பட்டிசர
மேயபடர் புன்சடையினான்
வெருவ மத யானையுரி போர்த்துஉமையை
அஞ்சவரு வெள்விடையினான்
உருவம்எரி கழல்கள் தொழ உள்ளம் உடை
யாரைஅடை யாவினைகளே. 5

முழவு என்னும் வாத்தியம் அதிர்ந்து ஒலிக்க, மழபாடியில் திருக்கோயில் திருவிழாக்கள் இனிது மேவ, பருவமழையின் காரண மாக வளமைகள் நனி பெருக ஒளி திகழும் பட்டீச்சரத்தில் இனிது விற்றிருப்பவர், சிவபெருமான். அவர் படர்ந்த சடையுடையவர்; உமாதேவி அஞ்சி வியப்புறுமாறு, யானையின் தோலை உரித்துப் போர்த்தவர்; இடப வாகனத்தை உடையவர். நெருப்புப் போன்ற செம்மேனியராக விளங்கும் அப்பெருமானின் திருக்கழல்களைத் தொழுபவர்களுக்கு, வினையால் உண்டாகும் துன்பம் சாராது.

மறையினொலி கீதமொடு பாடுவன
பூதமடி மருவிவிர வார்
பறையினொலி பெருக நிகழ் நட்டம்அமர்
பட்டிசர மேயபனிகூர்
பிறையினொடு மருவியதொர் சடையினிடை
யேற்றபுனல் தோற்ற நிலையாம்
இறைவனடி முறைமுறையின் ஏத்துமவர்
தீத்தொழில்கள் இல்லர்மிகவே. 6

---

**மொழிகள் சாதனமேயன்றி லட்சியமன்று. கருத்தைக் கூறு வதே நம் நோக்கம். அதற்குரிய ஆயுதமே மொழி.**

**—ரெய்னால்ட்ஸ்**

வேதங்கள் ஒலிக்கப் பூதகணங்கள் சூழ்ந்து திருவடியைப் போற்ற, பறைகளின் ஒலியைப் பெருக்கித் திருக்கூத்து புரிபவர், சிவ பெருமான். அவர் பட்டீச்சரத்தில் மேவிப் பிறைச்சந்திரனையும் கங்கையையும் சடை முடியில் தரித்து விளங்குபவர். அப்பெருமானை நியமமாக ஏத்தி வணங்குபவர்களுக்குத் துன்பத்தைத் தரும் வினைகள் விலகும்.

பிறவிபிணி மூப்பினொடு நீங்கிஇமை
யோர்உலகு பேணலுறுவார்
துறவுயெனும் உள்ளம்உடை யார்கள் கொடி
வீதியழ காயதொகுசீர்
இறைவன்உறை பட்டிசரம் ஏத்திஎழு
வார்கள்வினை யேதும்இலவாய்
நறவவிரை யாலும்மொழி யாலும்வழி
பாடு மற வாத அவரே. 7

பிறவியாகிய பிணியும் மூப்பும் நீங்கித் தேவர்களால் போற்றப் படுகின்றவர்களும், உள்ளத்தால் உலகப் பற்றினைத் துறந்த சிவ ஞானிகளும் கொண்டு விளங்குகின்ற வீதிகளை உடைய சிறப்புடன், சிவபெருமான் வீற்றிருக்கின்ற திருக்கோயிலாவது, பட்டீச்சரம் ஆகும் அதனை ஏத்தித் தொழுபவர்கள், வினை அற்றவர்களாய் விளங்குவர் அவர்கள், குணத்தாலும் வாக்காலும் ஈசனையே போன்றவர்கள்.

நேசமிகு தோள்வலவன் ஆகியிறை
வன்மலையை நீக்கியிடலும்
நீசன்விறல் வாட்டிவரை யுற்றதுஉண
ராத நிரம் பாமதியினான்
ஈசன்உறை பட்டிசரம் ஏத்தியெழு
வார்கள்வினை யேதும் இலவாய்
நாசமற வேண்டுதலின் நண்ணல்எளி
தாம்அமரர் விண்ணுலகமே. 8

---

**இயற்கைப்படைப்பில் எத்தனையோ அதிசயங்கள் உண்டு. ஆனால் அவையாவற்றிலும்சிறப்பான அதிசயம்மனிதனே.**
**—ஸோபியாக்கிளிஸ்**

இராவணன், தோள் வலிமையில் விருப்பம் உடையவனாகிக் கயிலையைப் பெயர்த்தபோது, அவனுடைய வலிமையை அழித்து விளங்கிய சிவபெருமான், யாராலும் அறியப்படாதவர். அவர், பிறைச் சந்திரனைச் சூடிப் பட்டீச்சரத்தில் உறைபவர். அப்பெருமானை ஏத்தி வணங்குபவர்கள், வினையாவும் நீங்கப்பெற்றவர்களாய், இனியும் பிறத்தலை அடையாதவர்களாய் விளங்கி அமரர் தம் விண்ணுலகத்தை எளிதாக அடைவார்கள்.

தூயமல ரானும்நெடி யானும் அறி
யார் அவன் தோற்ற நிலையின்
ஏயவகை யானதனை யார் அது அறி
வார் அணிகொள் மார்பின் அகலம்
பாயநல நீறது அணி வான் உமைத
னோடும் உறை பட்டிசரமே
மேயவனது ஈரடியும் ஏத்தஎளி
தாகும்நல மேலுலகமே. 9

சிவபெருமானது திருவண்ணத்தைப் பிரமன் திருமால் மற்றும் எவரும் அறியமாட்டார்கள். அழகு மிக்க அகன்ற திருமார்பில் நலம் திகழும் திருநீற்றைக் குழையப் பூசி விளங்குகின்ற ஈசன், உமாதேவியாரோடு உறையும் இடம் பட்டீச்சரம் ஆகும். அப்பெருமான் திருவடியை ஏத்த மேன்மையான விண்ணுலக வாழ்க்கை எளிதாகக் கூடும்.

தடுக்கினை இடுக்கிமட வார்களிடு
பிண்டமது உண்டு ழல்தரும்
கடுப்பொடி யுடற்கவசர் கத்துமொழி
காதல் செய்தி டாதுகமழ்சேர்
மடைக்கயல் வயற்கொண்மழ பாடிநகர்
நீடுபழை யாறையதனுள்
படைக்கொரு கரத்தன்மிகு பட்டிசரம்
ஏத்தவினை பற்றறுதலே. 10

---

பயப்படாத மனிதனைப் பார்த்திருக்கிறேன். ஆனால் வெட்கப்படாத மனிதனைப் பார்த்ததில்லை. —கிரெளன்

சமணரும் சாக்கியரும் உரைக்கும் அன்பற்ற மொழிகளை ஏற்க வேண்டாம். மடைகளில் கயல்கள் விளங்கும் வளப்பம் மிகுந்த வயல்கள் கொண்ட மழபாடி நகரில் மேவும் பழையாறையுள், கையில் மழுப் படை உடையவராய்ப் பட்டீச்சரத்தில் வீற்றிருக்கும் சிவபெருமானை ஏத்த, வினை நீங்கும்.

மந்தமலி சோலைமழ பாடிநகர்
நீடுபழை யாறையதனுள்
பந்தமுயர் வீடுநல பட்டிசர
மேயபடர் புன்சடையனை
அந்தண் மறை யோர்இனிது வாழ்புகலி
ஞானசம் பந்தன் அணியார்
செந்தமிழ்கள் கொண்டினிது செப்பவல
தொண்டர்வினை நிற்பதிலவே. 11

திருச்சிற்றம்பலம்

தென்றல் உலாவும் சோலை திகழ் மழபாடி நகரில் பழையாறை என்னும் பகுதியுள் முத்தி நலம் அளிக்கவல்ல பட்டீச்சரத்தில் மேவிய சிவபெருமானை, மறையவர்கள் இனிது வாழும் புகலியில் திகழும் ஞானசம்பந்தன், அணி திகழும் செந்தமிழால் உரைத்த, இத்திருப் பதிகத்தை இனிது ஓதவல்ல திருத்தொண்டர்கள், வினையிலிருந்து நீங்கப் பெற்றவர்கள் ஆவார்கள்.

---

சிவஞான முனிவர் துதி

கருணைபொழி திருமுகத்தில் திருநீற்று நுதலும்
கண்டாரை வசப்படுத்தக் கனிந்த வாயழகும்
பெருமைதரு துறவோடு பொறையுளத்திற் பொறுத்தே
பிஞ்ஞகனார் மலர்த்தாள்கள் பிரியாத மனமும்
மருவினர்கள் அகலாத ஞானமே வடிவாம்
வளர் துறைசைச் சிவஞானமாமுனிவன்
மலர்த்தாள்
ஒருபொழுதும் நீங்காமல் எமதுளத்தில் சிரத்தில்
ஓதிடு நாவினில் என்றும் உன்னிவைத்தே யுரைப்பாம்.

—தொட்டிகலை-சுப்பிரமணியமுனிவர்

---

தர்மத்துக்குச் சத்தியம் காப்பு. — விதுரநீதி

## வைகாசி மாத அடியவர் வழிபாடு

கழற்சிங்க நாயனார் (21—5—2001)

காடவர்தங் குலமுவந்த கழலார்சிங்கர்
காதல்மிகு தேவியுடன் காவல்ஆரூர்
ஆடவல பெருமானைப் பணிவார் அங்கோர்
அகன்றமலர் தனைமோந்த அரிவை மூக்கைச்
சேடுடைய செருத்துணையார் அரியக் கேட்டுத்
திறல்அரசர் மலர்எடுத்த செங்கைஎன்றே
சூடகமுன் கைதடிந்து ஞாலம் காத்த
தூய்மையார் அருள்சேர்ந்த வாய்மையாரே.

குருபூஜைநாள் வைகாசி மாத பரணி நன்னாள்.

நமிநந்தி அடிகள் (27—5—2001)

நண்ணுபுகழ் மறையோர்வாழ் ஏமப்பேறூர்
நமிநந்தி யடிகள் திருவிளக்கு நல்க
எண்ணெய்அமணர்கள் விலக்க நீரால் ஆரூர்
இலங்கும்அரனெறியாருக்கு ஏற்று நாளில்
கண்ணமணர் கெடக்கண் பெற்று அடிகள் வாழக்
காவலனால் நிபந்தங்கள் கட்டுவித்தே
அண்ணலருள் கண்டாரூர் அமர்ந்து தொண்டர்க்கு
ஆணி எனும் அரசினருள் அடைந்துளாரே.

குருபூஜைநாள் வைகாசித் திங்கள் பூசம் நன்னாள்.

சோமாசி மாற நாயனார் (28—5—2001)

அம்பர்நகர் அந்தணர்சோ மாசிமாறர்
அன்பர்களாம் யாவர்க்கும் அன்பின் அமுதளிப்பார்
உம்பர்நிகழ்வகை யாகம்பலவுஞ் செய்யும்
உண்மையினார் ஐந்தெழுத்தும் ஓவா நாவார்
நம்பர் திகழ் திருவாரூர் நயந்து போற்றும்
நாவலர்கோன் அடிபரவும் நன்மையாலே

---

**ஒருவன் தான் நினைப்பவற்றை எல்லாம் எல்லா இடங்களிலும் கூறிவிட எண்ணலாகாது.**

**—டால்ஸ்டாய்**

இம்பர்தொழ உம்பர்பணிந்து ஏத்த மேலை
ஏழுலகும் உடனாளும் இயல்பினாரே.

குருபூஜைநாள் வைகாசித் திங்கள் ஆயில்ய நன்னாள்.

திருஞானசம்பந்தர் (7—6—2001)

காழிநகர்ச் சிவபாத விருதயர் தந்த
கவுணியர்கோன் அமுதுஉமையாள் கருதியூட்டும்
ஏழிசையின் அமுதுண்டு தாளம் வாங்கி
இலங்கியநித் திலச்சிவிகை இசைய ஏறி
வாழுமுய லகன் அகற்றிப் பந்தர் ஏய்ந்து
வளர்கிழிபெற்று அரவின்விடம் மருகல்தீர்த்து
வீழிநகர்க் காசுஎய்தி மறைக்கதவம் பிணித்து
மீனவன் மேனியின் வெப்புவிடுவித் தாரே.

ஆரெரியிட்டு எடுத்தஏடு அவைமுன் னேற்றி
ஆற்றிலிடும் ஏடெதிர்போய் அணைய ஏற்றி
ஓரமணர் ஒழியாமே கழுவி லேற்றி
ஓதுதிருப் பதிகத்தால் ஓடம் ஏற்றிக்
காருதவும் இடிபுத்தன் தலையில் ஏற்றிக்
காயாத பணையின்மீது கனிகள் ஏற்றி
ஈரமிலா அங்கமுயிர் எய்த ஏற்றி
இலங்குபெரு மணத்தரனை எய்தினாரே.

குருபூஜைநாள் வைகாசி திங்கள் மூலநன்னாள்.

திருநீலநக்கர் (7—6—2001)

நீதிதரு மறையோர்வாழ் சாத்தமங்கை
நீலநக்கர் அயவந்தி நிமலர்மேனி
ஊதிவிழுஞ் சிலம்பி கடிந்தவளை நீத்தார்க்கு
உமியாத இடம்நாதன் உறுநோய்காட்டக்
காதல்மிகு மனைவியையும் மகிழ்ந்துமேவிக்
காழியர்கோன் அமுதுசெயக் களித்து வாழ்ந்து
வேதிகையிற் பாணனார்க்கு இடமும்நல்கி
விளங்குபெரு மணத்தரனை மேவினாரே.

குருபூஜைநாள் வைகாசித் திங்கள் மூலநன்னாள்.

---

**சண்டையில் முதலில் வாயை மூடுகிறவன் நல்ல குடும்பத்தில் பிறந்தவன்.**

**—ஹிப்ரு**

திருநீலகண்ட யாழ்ப்பாணர் (7—6—2001)

பிறங்குளருக்கத் தம்புலியூர் வாழும் பேரியாழ்
பேணிதிரு நீலகண்டப் பாண னார்சீர்
நிறந்தருசெம் பொற்பலகை ஆலவாயின்
நிமலன்பாற் பெற்று ஆரூர் நேர்ந்து சிவன் வாயில்
திறந்தருளும் வடதிசையே சேர்ந்து போற்றித்
திருஞான சம்பந்தர் திருத்தாள் வாழ்த்தி
அறந்திகழும் திருப்பதிகம் யாழில் ஏற்றி
ஆசில்திருப் பெருமணஞ்சேர்ந்து அருள்பெற்றாரே.

குருபூஜைநாள் வைகாசித் திங்கள் மூலநன்னாள்.

முருக நாயனார் (7—6—2001)

மன்னுதிருப் புகலூர் வாழ் முருகனாராம்
மறையவர்கோ வர்த்த மானீச்ச ரத்தார்
சென்னியினுக்கு அழகமரும் மலர்கள் கொய்து
திருமாலை புகழ்மாலை திகழ சாத்திக்
கன்னிமதில் கழுமலநா டுடைய நாதன்
காதல்மிகு மணங்காணுங் கிளிப்பினாலே
இன்னல்கெட உடன்சேவித்து அருளால் மீளாது
இலங்குபெரு மணத்து அரனை எய்தினாரே.

குருபூஜைநாள் வைகாசித் திங்கள் மூலநன்னாள்.

சேக்கிழார் நாயனார் குருபூஜைநாள் (27—5—2001) வைகாசிப் பூச நன்னாள்.

இவ்வடியார்களின் குருபூஜை நாட்களில் மதுரைப் பன்னிரு திருமுறை மன்றத்தில் வழிபாடும் பெரிய புராணச் சிந்தனையும் நிகழும்.

—C.S. சொக்கலிங்கம்

## உழவாரம் புரவலர்

மதுரை, திருமுறைத் தொண்டர் சிவநெறித் தமிழ்மணி புலவர். சி. கலியாணசுந்தரம் அவர்கள் தமது எழுபதாம்ஆண்டு நிறைவுநாள் நினைவாக திருநாவுக்கரசு சுவாமிகள் குருபூஜை அன்று 'உழவாரம்' இதழுக்கு ரூபாய் ஆயிரத்தொன்று வழங்கிப் புரவலரானார்.

# செய்திகள்

## பன்னிரு திருமுறை மன்றம், மதுரை

ஸ்ரீ திருநாவுக்கரசு சுவாமிகள் குருபூஜை விழா ஏப்ரல் 18, 19 தேதிகளில் நடைபெற்றது. திருப்பரங்குன்றம் T.A. திருஞானசம்பந்தம் குழுவினர் திருமுறை இசை வழங்கினர். தமிழருச்சனை, குருபூஜை, மாகேசுவரபூஜை நிகழ்ந்தன புலவர் நீ.சீ. சுந்தரராமன் விரிவுரையாற்றினார். மன்றப் புரவலர் திருமுறைக் காவலர் கயிலைத்திரு. M. கண்ணப்பன் பொருளுதவினார். பாகனேரி அமரர் இராம. முத்துப் பழனியப்ப செட்டியார் திருமதி கண்ணத்தாள் ஆச்சி அறக்கட்டளையிலிருந்து அன்னம்பாலிப்பு செய்யப்பட்டது.

நல்லாசிரியர் புலவர் கி. முத்து எழுதிய செந்தமிழ் நாட்டின் திருவிழாக்கள் என்னும் நூல்வெளியீட்டு விழா மன்றத்தில் 29-4-2001 அன்று நடைபெற்றது. புலவர் நீ.சீ சுந்தரராமன் நூலினை வெளியிட V.V.B. ஜெயசுப்பிரமணியன் பெற்றுக் கொண்டார். பின்னர் பண்ணும் பதிகங்களும் விளக்கச் சொற்பொழிவு பழந்தக்கராகப் பண்ணில் நிகழ்ந்தது, P.R. சுப்பிரமணியன் திருமதி லலிதா தம்பதியர் உபயமளித்தனர்

மன்றத்தில் உமாபதி சிவாசாரியார் குருபூஜை 5-5 2001 அன்று நடைபெற்றது. காலையில் குருபூஜைவழிபாடுகள், மாகேசுவர பூஜையும் மாலையில் விரிவுரையும் நிகழ்ந்தன. பண்ணிசை மாமணி S.S. மோகன்ராம் விழா உபயமளித்தார்.

## தியாகராசர் கல்லூரி, மதுரை

இக்கல்லூரியின் தமிழ்த்துறை சார்பில் திங்கள்தோறும் நிகழும் சைவசித்தாந்தச் சொற்பொழிவு வரிசையில் 19-3-2001 அன்று டாக்டர் ச. கங்காதரன் வீடும் முயற்சியும் என்ற தலைப்பில் சொற்பொழிவாற்றினார். கல்லூரித் தலைவர் டாக்டர் திருமதி. இராதா தியாகராசன் தலைமை தாங்கினார்.

---

**தனிமை நாடுபவன் சிந்திக்கும் கலையைப் பயிலுதல் வேண்டும்.**

**—ஆபிரகாம் கௌலி**

## ஸ்ரீ திருப்புகழ் சபை, மதுரை

இச்சபை சார்பில் 25-2-2001 அன்று திருப்புகழ் செஞ்சொல் விளக்கவுரை நடைபெற்றது K.T. கிருபாசங்கர் வரவேற்றார். பொற்கிழிக் கவிஞர் சொ.சொ.மீ. சுந்தரம் தாரகாசுரன் என்ற பொருளில் விரிவுரை நிகழ்த்தினார். ம. விஜயராஜன் நன்றி கூறினார். G. தண்டாயுதபாணி செட்டியார் நிகழ்ச்சி உபயமளித்தார்.

## காஞ்சி சிவனடியார் திருக்கூட்டம், காஞ்சிபுரம்

பங்குனி உத்திரப் பெருவிழாவை முன்னிட்டு ஸ்ரீ காமாட்சி அம்பாள் சமேத ஸ்ரீ ஏகாம்பரேசுவரர் திருக்கோயிலில் 18-3-2001 அன்று உழவாரப்பணி நிகழ்த்தப்பட்டது. நல்லி மார்க்க செட்டியார் கொடியேற்றிப் பணியினைத் தொடக்கி வைத்தார். பிற்பகல் நடைபெற்ற சமயப் பேரவையில் திருக்கோயில் செயல் அலுவலர் N. நடராஜமணி முன்னிலை வகிக்க புலவர் எஸ். சதாசிவம் உரை நிகழ்த்தினார்.

## அருள் ஞான சபை, திருநகர்

மதுரை திருநகரில் நன்னெறி பரப்பும் பணியில் அருள் ஞான சபை என்னும் பக்தி இயக்கம் 12-3-2001 அன்று தொடங்கப்பெற்றது. தவத்திரு ஓங்காரானந்தா சபையைத் தொடக்கி வைத்து சிறப்புரை ஆற்றினார். இதன் இரண்டாவது மற்றும் மூன்றாவது கூட்டங்கள் ஏப்ரல் 7, 29 தேதிகளில் நடைபெற்றன. சுவாமி கமலாத்மானந்தா, டாக்டர் கு. சுந்தரமூர்த்தி ஆகியோர் சிறப்புரை வழங்கினர். சபைப் புரவலர் டாக்டர் இராதா தியாகராசன் ஏற்பாடுகளைச் சிறப்புறச் செய்வித்தார்.

## தமிழ்நாடு சிவனடியார் திருக்கூட்டம், மதுரை

20-4-2001 அன்று மெய்ப்பொருளாய்வுத் தொடர் விரிவுரை இயல் இசை வித்தகர் பி.டி.ஆர். கமலைத் தியாகராசன் முன்னிலை

---

உபதேசிக்கும் பக்கத்தினின்று கேட்பவனும் பயன் அடைவான்.

—சாங்கிய கதோதேசம்

யில் திருவள்ளுவர் கழகத்தில் நடைபெற்றது. மெய்கண்ட நூல்களின் திறம் வரிசையில் சிவஞானபோதம் பற்றி முனைவர் கு. சுந்தரமூர்த்தி சொற்பொழிவாற்றினார். புலவர் சுப. இராமச்சந்திரன் வரவேற்க புலவர் தா. குருசாமி தேசிகர் நன்றி கூறினார்.

## திருக்குடந்தைத் திருமுறைமன்றம், கும்பகோணம்

குடந்தை அருள்மிகு சோமேசர் திருக்கோயிலில் கார்த்திகை சிறப்புச் சொற்பொழிவு 25-4-2001 அன்று நடைபெற்றது திருமுறைச் செம்மல் தாம வெள்ளை வாரணம் 'காரைக்கால் அம்மையார்' குறித்து சொற்பொழிவாற்றினார். M.K.M. சம்பந்தம் நன்கொடை அளித்தார்.

## தூத்துக்குடி சைவ சித்தாந்த சபை

காரைக்கால் அம்மையார் விழா 9-4-2001 அன்று நடைபெற்றது. கவிஞர் இராகவன் முத்து அம்மை அருளிய அந்தாதி என்ற பொருளில் சொற்பொழிவாற்றினார். 8. கணபதி சந்தானம் நிதியுதவினார்

13-4-2001 அன்று திலகவதியார் நினைவுப் பெருவிழா 8. தெ. நாராயணன் - நா. திலகவதி பொருளுதவியுடன் நடைபெற்றது. தமக்கையும்-தம்பியும் என்ற பொருளில் டாக்டர் தி. சுந்தராம்பாள் சொற்பொழிவாற்றினார்.

19-4-2001 அன்று திருநாவுக்கரசு சுவாமிகள் விழா R.S.V. நல்லசிவம் உபயத்தில் நடைபெற்றது. திருமதி A. பாலசரஸ்வதி 'பதிகச் செஞ்சொல்' என்ற பொருளில் உரை நிகழ்த்தினார்.

26-4-2001 அன்று மங்கையர்க்கரசியார் நினைவுப் பெருவிழா P.S. தியாகராசன் உதவியுடன் நிகழ்த்தப்பெற்றது. சித்தாந்த ரத்தினம் M. சிவசண்முகம் சொற்பொழிவாற்றினார்.

மாதவச் சிவஞான சுவாமிகள் நினைவுப் பெருவிழா 2-5-2001 அன்று நடைபெற்றது N. பிரபாகரன் பொருளுதவினார். சித்தாந்த நன்மணி புலவர் ச. இரத்நவேலன் காஞ்சிபுராணம் என்ற பொருளில் விரிவுரையாற்றினார்.

---

**பொறுமை உள்ளவனுக்கு அவன் விரும்பியதெல்லாம் கிடைக்கும்.**

**—பிராங்ளின்**

உமாபதி சிவாச்சாரியார் குருபூஜைவிழா 5-5-2001 அன்று திருமதி க. சண்முகத்தாய் நன்கொடை உபயத்தில் நடைபெற்றது. பேராசிரியர் முனைவர் கோமதி சூரியமூர்த்தி திருவருட்பயன் பற்றிப் பேசினார்.

## பசும்பொன் முத்துராமலிங்கத்தேவர் ஆய்வுமையம்

மதுரை ஆதீனகர்த்தர் ஸ்ரீலஸ்ரீ அருணகிரிநாத ஸ்ரீ ஞானசம்பந்த தேசிக பராமாசாரிய சுவாமிகள் அறக்கட்டளை சார்பில் மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தில் அமைக்கப்பட்டுள்ள பசும்பொன் முத்துராமலிங்கத்தேவர் ஆய்வு மையத்தின் மூன்றாம் ஆண்டு சொற் பொழிவு நிகழ்ச்சி 4-4-2001 அன்று தொலை நிலைக்கல்வி இயக்ககத் தில் நடைபெற்றது. துணைவேந்தர் பேராசிரியர் மு. சாலிகு தலைமை ஏற்றார். ஆய்வுமைய இயக்குநர் பேராசிரியர் க.வி. செயராசு வரவேற்றார். தேவரும் ஞானமும் என்ற தலைப்பில் புலவர் நீ.சி. சுந்தரராமன் உரை நிகழ்த்தினார். பேராசிரியர் பி.ப. கோபால கிருஷ்ணன் நன்றி கூறினார்.

## ஸ்ரீ குருஞான சம்பந்தர் பணிமன்றம், ஆச்சாள்புரம்

ஆச்சாள்புரம் அருள்மிகு திருவெண்ணீற்றுமையம்மை உட னாகிய சிவலோகத் தியாகேசர் திருக்கோயிலில் 19-4-2001 அன்று திருநாவுக்கரசர் குருபூஜையும் உழவாரத் திருத்தொண்டும் நடை பெற்றன. ஆகமப்பிரவீணா அ. ஞானஸ்கந்த சிவாசாரியார் உழவாரத திருத்தொண்டினைத் தொடங்கி வைத்தார். சீர்காழி S. திருஞான சம்பந்த ஓதுவார் திருமுறை விண்ணப்பிக்க முனைவர் தி. பொன்னம்பலம் சொற்பொழிவாற்றினார்.

## சைவ நெறிக் கழகம் விக்கிரமசிங்கபுரம்

திருவாவடுதுறை ஆதீனம் சீர் வளர் சீர் சிவப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள் அருளாணைப்படி மாதவச் சிவஞான முனிவர் 26ஆம் ஆண்டுவிழா அறக்கட்டளைச் சொற்பொழிவு ஏப்ரல் 30 மே 1, 2 தேதிகளில் நடைபெற்றது. இளைய சந்நிதானம் சீர்மிகு காசி விசுவநாததேசிக சுவாமிகள் அருளாசி வழங்கினார்கள். சிவநெறிச்

---

பொறுமையுடன் இருக்கக் கற்றுக் கொவ்வதே வெற்றியின் ரகசியமாகும். —டிமேஸ்ட்ரீ

செம்மல் மா பட்டமுத்து சொற்பொழிவாற்றினார். மே 21 முதல் 24 வரை சித்தாந்தப் பயிற்சி வகுப்புகள் நடைபெற்றன.

## காஞ்சிபுரம் திருமுறை மன்றம், காஞ்சிபுரம்

பிள்ளையார்பாளையம் அருள்மிகு திருமேற்றளீசர் திருக்கோயிலில் கல்வெட்டுத் திறப்பு விழாவும் 21 ஆம் ஆண்டு பங்குனி மாத வழிபாடும் 8-4-2001 அன்று நடைபெற்றன நிர்வாக அறங்காவலர் சார. ஜெகந்நாதன் விழாத்தலைமை ஏற்றார். அறங்காவலர் க. ஆறுமுகம் முன்னிலையில் கந்தன் சில்க்ஸ் V.கந்தசாமி முதலியார் கல்வெட்டினைத் திறந்தார். மா. சுந்தரமூர்த்தி சொற்பொழிவாற்றினார். V. கேசவ முதலியார் T. கிஷ்டப்ப முதலியார் ஆகியோர் கல்வெட்டு மற்றும் நிகழ்ச்சி உபயமளித்தனர்.

இம்மன்றத்தின் 22 ஆம் ஆண்டுத் தொடக்கவிழா 22-4-2001 அன்று A.K G. திருமண மாளிகையில் நடைபெற்றது. காஞ்சிபுரம் திருவாவடுதுறை ஆதீனக் கிளைமடம் தவத்திரு. சுந்தரமூர்த்தி தம்பிரான் சுவாமிகள் தலைமை ஏற்றார். கலைமாமணி ஆ. விநாயக முதலியார் இறைவணக்கம் பாடினார். சு. சதாசிவம் ஆண்டறிக்கை வாசித்தார். டாக்டர் ஔவை நடராசன் தலைமையில் C.S. குப்புராஜ் தமிழாகரர் மா. வைத்தியலிங்கம் யாழ்ப்பாணம் நா. சுப்பிரமணியம் பு.மா. ஜயசெந்தில்நாதன் ஆகியோர் சொற்பொழிவாற்றினர். இசைப் பேரறிஞர் திருப்பாம்புரம் சே. சண்முகசுந்தரம் திருமுறை இன்னிசை வழங்கினார்.

## சிவபூசை கூட்டு வழிபாடு, அவிநாசி

அவிநாசி, மேற்குரதவிதி கெங்காதரஞ் செட்டியார் சத்திரத்தில் 36ஆவது ஆண்டு சிவபூசை கூட்டு வழிபாடு 29-4-2001 அன்று நடைபெற்றது. அறங்காவலர்கள் S. கொண்டப்பன் A. சொக்கலிங்கம் M. விவேகானந்தம் ஆகியோர் ஏற்பாடுகளைச் செய்திருந்தனர்.

## திருக்கயிலாய பரம்பரைச் செங்கோலாதீனம், பெருங்குளம்

ஆதீனக் குருமுதல்வர் ஸ்ரீலஸ்ரீ சத்யஞான தரிசனி சுவாமிகள் குருபூஜைவிழா 28-4-2001 அன்று நடைபெற்றது. 102வது குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ கல்யாண சுந்தரசத்திய ஞான பண்டாரச் சந்நிதி

---

அன்பே அறத்திற்கு மார்க்கம்; தியாகத்திற்குத் திறவு கோல்; அன்பே ஞானத்தின் சிகரம். —புத்தர்

கள் அருளாசியுரை வழங்கினார். குருமூர்த்த வழிபாடு, குருபூசை, சிறப்பு நூல் வெளியீடு ஆகியன நிகழ்ந்தன. மா. பட்டமுத்து சொற் பொழிவாற்றினார்.

## ஸ்ரீ சிவாக்கிர யோகிகள் ஆதீனம், சூரியனார் கோயில்

திருக்கயிலாய பாம்பரை என்னும் ஸ்ரீ கந்த பரம்பரை ஸ்ரீ சிவாக்கிரயோகிகள் ஆதீன குருமுதல்வர் ஸ்ரீ சிவாக்கிர யோகிகள் குருபூஜை விழா 26, 27 தேதிகளில் நடைபெற்றது. திருமுறை விண்ணப்பம், குருமூர்த்தங்கட்குச் சிறப்பு அபிடேக ஆராதனை, குரு பூசை விழா மலர் வெளியீடு, திருமுறை சித்தாந்தச் சொற்பொழிவு கள், மகேஸ்வரபூசை, சிவஞானக் கொலுக்காட்சி ஆகியன நிகழ்ந்தன இருபத்து ஏழாவது குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சங்கரலிங்க தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் உழவாரம் ஆசிரியர் புலவர் நீ.சி. சுந்தராாமன், திருக்காட்டுப்பள்ளி பன்னிரு திருமுறை மன்றப் பொதுச் செயலர் சி. சுந்தராஜ விருதுள்ளார், திருமதி பாலம்மாள் சங்கர நாராயணன் ஆகியோருக்கு விருதுகள் வழங்கி அருளாசி வழங்கினார்.

## திருமுறை இசைத்தமிழ் வழிபாட்டுக் குழு

ஓதுவா மூர்த்திகளின் கூட்டமைப்பாகிய இக்குழுவினரின் சார் பில் மூன்றாம் ஆண்டு திருமுறை இசைத்தமிழ் விழா ஞானசம்பந்தர் அவதரித்த சீர்காழிப் பதியில் உள்ள அருள்மிகு சட்டைநாத சுவாமி திருக்கோயிலில் ஏப்ரல் 28, 29 தேதிகளில் நடைபெற்றது. தருமை ஆதீன குருமகாசந்நிதானம் ஸ்ரீல ஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள், திருப்பனந்தாள் காசித்திருமட அதிபர் கயிலை மாமுனிவர் கவத்திரு முத்துக்குமார சுவாமித் தம்பிரான் சுவாமிகள் திருவாவடுதுறை ஆதீன இளைய சந்நிதானம், மற்றும் ஆதீனகர்த்தர் கள் அருளாசி வழங்கினார்கள். தலைவர் தருமபுரம் V. சுவாமிநாதன் வரவேற்றார். P.T.R. கமலைத் தியாகராசன் சிறப்புரை வழங்கினார். பழனி மு குமாரசாமி தேசிகருக்குதிருமுறை இசைத்தமிழ் அறிஞர் என்ற பட்டமும் அ. அருணாசலதேசிகருக்குப் பொற்காசும் வழங்கப் பட்டன. திருவாவடுதுறை அ. இராமசாமி ஓதுவாருக்கு ரூ 1001/– வழங்கப்பட்டது. திருப்பனந்தாள் சோ. முத்துக்கந்தசாமி நன்றி கூறினார்.

---

சோம்பலே துன்மார்க்கத்தின் தந்தை. —பழமொழி

## மாதவச் சிவஞான முனிவர் குருபூஜை

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம் சிவஞான மாபாடியம் அருளிய மாதவச் சிவஞான முனிவர் 216 ஆவது ஆண்டு சித்திரை ஆயில்யத் திருநாள் சிறப்பு வழிபாட்டு விழா, 1-5-2001 அன்று சுவாமிகள் தோன்றிய விக்கிரமசிங்கபுரம், துறவுநிலை பெற்ற சுசீந்திரம், நெடுநாள் தங்கியிருந்த காஞ்சிபுரம், சிவனடி சேர்ந்த திருவாவடுதுறை தலங்களில் சிறப்பாக நடைபெற்றது. விழாவில் அஷ்டப்பிரகரணம் 8 பிரமோக்ஷ நிராச காரிகை நூல் – விழாமலர் வெளியீடும் சிவஞான மாபாடியம் சிற்றுரை பகுதி-1-குறுந்தட்டு (CD) வெளியிடும் விரிவுரைகளும் நிகழ்ந்தன, சைவசித்தாந்த கலாநிதி டாக்டர் மு. சோமசுந்தரம் நூலினை வெளியிட்டு சிறப்புரை ஆற்றினார். கோப்பு கோ. நடராசச் செட்டியார் முதற்படியினைப் பெற்றுக் கொண்டார்.

## ஆலய உழவார தொண்டுசீர் திருக்கூட்டம், சைதாப்பேட்டை

சைதாப்பேட்டை காரணீசுவரர் திருக்கோயிலில் மே 12, 13 தேதிகளில் பன்னிரு திருமுறைப் பெருவிழா நடைபெற்றது. சிவபூசை திருமுறை வீதிஉலா, அறிஞர் பெருமக்களின் சொற்பொழிவுகள் நடைபெற்றன.

---

## சைவசித்தாந்தத்தின் கோட்பாடுகள்

1. உள்ளது அழியாது; இல்லது தோன்றாது
2. செய்வோனை இன்றிச் செய்வினை இல்லை
3. சடத்திற்சித்தும் சித்திற்சடமும் தோன்றா
4. செய்பொருள் வேறு; செய்ப்படுபொருள் வேறு இரண்டும் ஒன்றாகமாட்டா

---

அடிமைத்தனம் தவறில்லை என்றால் வேறு எதுவுமே தவறில்லை.

—ஆபிரகாம்லிங்கன்

5. சூனியத்திலிருந்து ஒன்றும் தோன்ற இயலாது
6. சுட்டியுணரப்பெறும் பொருள்கள் அனைத்தும் அழியும்
7. நித்தப்பொருள் சுட்டியுணரப்படாது
8. சடப்பொருள்கள் உருவம்மாறும் தன்மையன
9. உருமாறுதலால் ஒரு பொருளும் அழிவதில்லை
10. நுண்வடிவில் உள்ளதாய், பருவ வடிவில் இல்லாத ஒன்றே தோன்றும்
11. காரணப் பொருளின் தன்மையே காரியத்தில் உளதாகும்
12. தனிப்பொருள்கள் கூட்டுப்பொருள் ஆகாது
13. பொருள்களின் ஆற்றல் அழிவதில்லை
14. உற்பத்தி யாதற்கு முன்னும் காரியமுள்ளது
15. மாறுபட்ட இரண்டுதன்மை ஒரு பொருளுக்கு இயற்கையன்று
16. அவயவப் பகுப்புடைமை காரியப்பாட்டிற்கு ஏதுவாகும்
17. அருவமும் உருவமும் தம்முள் மாறுகோள் அன்று
18. பலவாய், ஏகதேசமாய், அநித்தமாய் உள்ளது காலம்
19. தூலமாம் உருவினுக்குச் சூக்குமம் முதல்
20. சடமுமாய்ப் பலவுமாய் உரைக்கப்படுவன எல்லாம் தோன்றி நின்று அழியும்
21. ஒலிக்கும் ஒளிக்கும் உருவம் உண்டு
22. இயற்கைத் தன்மை என்றும் மாறாது
23. இயற்கையின் விதிகள் எங்கும் என்றும் ஒரே வகையாக இயங்கும்
24. பருப்பொருளாக இருப்பன நுண்பொருளாக மாறும்
25. பருப்பொருளிலும் நுண்பொருளுக்கு ஆற்றல் மிகுதி
26. எண்ணங்களுக்கு ஆற்றலும் பயனும் உண்டு
27. எண்ணங்களுக்கு ஏற்பப்பயன் நிகழும்
28. இடம் எல்லையற்றது
29. காலம் முடிவில்லாதது
30. மனம் என்பது ஒரு சடப்பொருளே
31. ஒரு பொருள் தோற்றத்திற்கு முதல்துணை நிமித்தம் என மூன்று காரணங்கள் உண்டு
32. உள்பொருள் காணப்படவேண்டும் என்ற நியதிஇல்லை
33. காணப்படாத அருவப் பொருளுக்கும் உருவம் உண்டு

---

மெய்ப்பிக்க முடியாதபோது நம்புகிறோம். —டெனிஸன்

# UZHAVARAM April 2001

Printed book (Private Circulation Only)



உ

சிவமயம்

'என் கடன் பணிசெய்து கிடப்பதே'

## உழவாரம்

ஆசிரியர் : கூடல்சுந்தரன் துணை ஆசிரியர் : சிவ. பார்வதி B.Com B.A

மதுரைப் பன்னிரு திருமுறை மன்றத்திற்காக வெளியிடுபவர்:

C.S. சொக்கலிங்கம், D. 89, பாரதியார் தெரு, டோர் நிர் 12 திருநகர், மதுரை – 6. ☎ 883086

அச்சு : அபிராமி அச்சகம், B-40 திருநகர், மதுரை–6. ☎ 883085

---

பெறுநர், திரு. N. திருநாவுக்கரசு நூல்-அஞ்சல்

7/2 அச் 4வது தெரு, T.T. நகர்

அப்பர் அருளகம், காரைக்குடி

630002

---

புரவலர் கட்டணம் ரூ 1000/-

ஆயுள் சந்தா - ரூ. 500/- ஆண்டுச்சந்தா - ரூ. 50/-





